20th January 1961]

SRI B. DORAISAMI REDDIAR : இவைகள் எல்லாம் நடந்த சம்பவங்கள், இவைகளை எல்லாம் சொன்னால்தான் எல்லோருக்கும் தெரியும். இவ்விதம் ஒவ்வொரு தாலுகாவுக்கும் கொடுத்து வருகிறார்கள் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : இத்தனையும் சொல்லி இவைகள் எல்லாம் கனம் மந்திரி அவர்களுக்குத் தெரியுமா என்று கேட்டால் கேள்வி கேட்பதுபோல் இருக்கும்.

DR. (SRIMATHI) T. S. SOUNDARAM RAMACHANDRAN : இவ்விதம் ஹரிஜன குடியிருப்புகளுக்கு வெகுமதி கொடுக்கிற பொழுது எந்த காலனியிலிருந்து அதிகமான குழந்தைகளை பள்ளிக்கூடத்திற்கு அனுப்புகிறார்கள் என்பதையும் கணக்கிலெடுத்து வெகுமதி கொடுப்பதற்குரிய ஒரு அம்சமாக பரிசீலனை செய்ய முடியுமா என்பதை கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : காலனியை சுத்தமாக வைத்திருப்பதைப்பார்த்துத்தான் இப்போது பரிசுகள் வழங்க திட்டமிடப்பட்டிருக்கிறது. இதில் எத்தனை மாணவர்களை பள்ளிக்கூடங்களுக்கு அனுப்புகிறார்கள் என்பதை சேர்ப்பதற்கில்லை என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMY : காலனிகளை சுத்தமாக வைத்திருந்தால் பரிசு கொடுக்கப்படும் என்று சொல்லுகின்ற நோக்கத்தில் பல காலனிகள் சுடுகாட்டின் ஓரத்திலும் பள்ளத்தாக்குகளிலும் ஏற்படுத்தப்படுகின்றன. இதை தவிர்ப்பதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்கள் இவ்விதம் இந்தச் சமயத்தில் சொல்வது நல்லதல்ல என்று நினைக்கிறேன். சுத்தமாக வைத்திருக்கும் காலனிகளுக்கு பரிசு கொடுக்கப்படும் என்று சொல்லும்போது அவைகள் சுடுகாட்டின் பக்கத்தில் ஏற்படுத்தப்படுகிறது என்று சொல்வது சரியல்ல. இவ்விதம் ஏற்படுத்தப்படுகின்ற காலனிகளுக்காக வேண்டிய இடங்கள் சுடுகாட்டின் பக்கத்தில் இருந்தால் அவைகளை அக்வொயர் பண்ணக்கூடாது என்று சொல்லப்பட்டுவருகிறது.

*Food-Zones.*

* 37 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) உணவு தான்ய வகையில் சோனல் (zonal system) முறையை ஒழிப்பதற்கு மத்திய சர்க்கார் மாநில சர்க்காரின் ஆலோசனையைக் கேட்டார்களா?

(இ) அப்படியாயின், மாநில சர்க்கார் அனுப்பிய பதிலின் விவரமென்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) No Sir.

(இ) Does not arise.